உ

கணபதி துணை.

# சைவவினாவிடை.

முதலாவது

## கடவுளியல்.

1.—உலகத்துக்குக் கருத்தா யாவர்?

சிவபெருமான்.

2.—சிவபெருமான் எப்படிப்பட்டவர்?

என்றும் உள்ளவர், எங்கும் நிறைந்தவர், எல்லாம் அறிபவர், எல்லாம் வல்லவர்.

3.—சிவபெருமான் ஆன்மாக்களுக்காகச் செய்யுந் தொழில்கள் எவை?

படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றுமாம்.

௪.—சிவபெருமான் இந்த மூன்று தொழிலையும் எதைக்கொண்டு செய்வார்?

தமது சத்தியைக் கொண்டு செய்வார்.

ரு.—சத்தி என்னுஞ் சொல்லுக்குப் பொருள் யாது?

வல்லமை.

6.—சிவபெருமானுக்குச் சத்தி யாவர்?

உமாதேவியார்.



எ.—சிவபெருமானுடைய திருக்குமாரர்கள் யாவர்?

விநாயகக்கடவுள், வைரவக்கடவுள், வீரபத்திரக்கடவுள், சுப்பிரமணியக்கடவுள் என்னும் நால்வர்.

அ.—சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும்பொருட்டு உமாதேவியாரோடும் எழுந்தருளியிருக்கும் முக்கியஸ்தானம் யாது?

திருக்கைலாசமலை.

௯.—சிவபெருமான் ஆன்மாக்களுக்கு எவ்விடங்களிலே நின்று அருள் செய்வர்?

சிவலிங்கம் முதலாகிய திருமேனிகளிடத்திலும், சைவாசாரியாரிடத்திலும், சிவனடியாரிடத்திலும் நின்று அருள்செய்வர்.

திருச்சிற்றம்பலம்.

---

## இரண்டாவது
## புண்ணியபாவவியல்.

௧௦.—சிவபெருமான் ஆன்மாக்களுக்காக அருளிச்செய்த முதனூல்கள் எவை?

வேதம், சிவாகமம் என்னும் இரண்டுமாம்.

௧௧.—வேதசிவாகமங்களில் விதிக்கப்பட்டவைகள் எவைகள்?

புண்ணியங்கள்.

௧௨.—புண்ணியங்களாவன யாவை?

கடவுளை வழிபடுதல், தாய்தகப்பனை உபாத்தியாயர் குரு முதலாகிய பெரியோர்களை வணங்குதல், உயிர்களுக்கு இரங்குதல், உண்மை பேசுதல், செய்ந்நன்றியறிதல் முதலானவைகள்.

௧௩.—புண்ணியங்களைச்செய்தவர் எதனை அனுபவிப்பர்.

மேலுலகங்களாகிய புண்ணியலோகங்களிலே போய், இன்பத்தை அநுபவிப்பர்.

௧௪.—வேத சிவாகமங்களிலே விலக்கப்பட்டவைகள் எவைகள்?

பாவங்கள்.

௧௫—பாவங்களாவன யாவை?

கொலை, களவு, கள்ளுக் குடித்தல், மாமிசம் புசித்தல், பொய் பேசுதல், வியபிசாரம், சூதாடுதல் முதலானவைகள்.

௧௬.—பாவங்களைச்செய்தவர் எதனை அனுபவிப்பர்?

நரகங்களிலே விழுந்து, துன்பத்தை அநுபவிப்பர்.

திருச்சிற்றம்பலம்.

## மூன்றாவது
## விபூதியியல்.

---

௧௭.—சிவபெருமானை வழிபடுஞ் சமயத்துக்குப் பெயர் யாது?

சைவசமயம்.

௧௮.—சைவசமயிகள் சரீரத்திலே ஆவசியகமாகத் தரிக்கவேண்டிய அடையாளம் யாது?

விபூதி.

௧௯.—விபூதியாவது யாது?

பசுவின் சாணத்தை அக்கினியினாலே சுடுதலால் உண்டாகிய திருநீறு.

௨௦.—எந்த நிற விபூதி தரிக்கத் தக்கது?

வெள்ளை நிற விபூதி.

௨௧.—விபூதியை எதில் எடுத்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும்?

பட்டுப் பையிலேனும், சம்புடத்திலேனும் எடுத்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும்.

௨௨.—விபூதியை எந்தத்திக்கு முகமாக இருந்து கொண்டு தரித்தல் வேண்டும்?

வடக்கு முகமாகவேனும், கிழக்கு முகமாகவேனும், இருந்துகொண்டு தரித்தல் வேண்டும்.

உ௩.—விபூதியை எப்படித்தரித்தல் வேண்டும்?

நிலத்திலே சிந்தாவண்ணம் அண்ணாந்து, "சிவ சிவ" என்று சொல்லி, வலக்கையின் நடு விரல் மூன்றினாலும் நெற்றியிலே தரித்தல் வேண்டும்.

உ௪.—விபூதி நிலத்திலே சிந்தினால் யாது செய்தல் வேண்டும்?

சிந்திய விபூதியை எடுத்துவிட்டு, அந்த இடத்தைச் சுத்தி செய்தல் வேண்டும்.

உ௫.—நடந்து கொண்டாயினும், கிடந்து கொண்டாயினும் விபூதி தரிக்கலாமா?

தரிக்கலாகாது.

உ௬.—எக்காலங்களிலே விபூதி ஆவசியகமாகத் தரித்துக்கொளளல் வேண்டும்?

நித்திரை செய்யப் புகும்போதும், நித்திரை விட்டெழுந்தவுடனும், தந்தசுத்தி செய்தவுடனும், சூரியன் உதிக்கும்போதும், அத்தமிக்கும் போதும், ஸ்நானஞ் செய்தவுடனும், போசனத்துக்குப் போம்போதும், போசனஞ் செய்தபின்னும், விபூதி ஆவசியகமாகத் தரித்துக்கொள்ளல் வேண்டும்.

உ௭.—ஆசாரியராயினும், சிவனடியாராயினும் விபூதிதந்தால், எப்படி வாங்கல் வேண்டும்?

மூன்றுதரமாயினும, ஐந்து தரமாயினும நமஸ்கரித்து, எழுந்து, கும்பிட்டு, இரண்டு கைக ளையும் நீட்டி வாங்கல் வேண்டும்.

உஅ.—விபூதி வாங்கித் தரித்துக்கொண்டபின் யாது செய்தல் வேண்டும்?

முன்போல மீட்டும் நமஸ்கரித்தல வேணடும.

உகூ.—சுவாமி முன்னும் குருமுன்னும் சிவனடியார் முன்னும் எப்படி நின்று விபூதி தரித்தல் வேண்டும்?

முகத்தைத திருப்பி நின்று தரித்தல் வேண்டும.

௩0.—விபூதி தாரணம் எத்தனை வகைப்படும்?

உத்தூளனம், திரிபுண்டரம என இரண்டுவகைப்படும. [திரிபுண்டரம்-மூன்று குறி

௩க.-திரிபுண்டரந் தரிக்கத்தக்க தானங்கள்யாவை?

சிரம், நெற்றி, மாரபு, கொப்பூழ், முழந்தாள கள் இரண்டு, புயங்கள இரண்டு, முழங்கைகள இரண்டு, மணிக்கட்டுக்கள இரண்டு, விலாப் புறம இரண்டு, முதுகு, கழுத்து எனனும் பதி னைமாம.

இவைகளுள், விலாப்புறம் இரண்டையும் நீக் கிக் காதுகள் இரண்டையுங் கொளவதும உண் டு. முழங்கைகளையும் மணிக்கட்டுககளையும் நீக கிப் பன்னிரணடு தானங் கொளவதும் உணடு.

௧௨.—திரிபுண்டரந் தரிக்குமிடத்து, நெற்றியில் எவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும்?

இரண்டு கடைப்புருவவெல்லைவரையுந் தரித்தல் வேண்டும். அதிற்கூடினாலுங் குறைந்தாலுங் குற்றமாம்.

௧௩.—மார்பிலும், புயங்களிலும் எவ்வளவுநீளந் தரித்தல் வேண்டும்?

அவ்வாறங்குல நீளந் தரித்தல் வேண்டும்.

௧௪.—மற்றைத் தானங்களில் எவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும்?

ஒவ்வோரங்குல நீளந் தரித்தல் வேண்டும்.

௧௫.—மூன்று குறிகளின் இடைவெளி எவ்வளவினதாய் இருத்தல் வேண்டும்?

ஒவ்வோரங்குல வளவினதாய் இருத்தல் வேண்டும். ஒன்றை யொன்று தீண்டலாகாது.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

## சிவமூலமந்திரவியல்.

௧௬.—சைவசமயிகள் நியமமாகச் செபிக்கவேண்டிய சிவ மூலமந்திரம் யாது?

ஸ்ரீ பஞ்சாக்ஷரம்.

௩௭.—ஸ்ரீ பஞ்சாக்ஷர செபஞ் செய்தற்கு யோக்கியராவார் யாவர்?

மதுபானமும் மாமிசபோசனமும் இல்லாதவராய், ஆசாரமுடையவராய், சிவதீக்ஷை பெற்றவராய் உள்ளவர்.

௩௮.—ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை எத்தனை உரு நியமமாகச் செபித்தல் வேண்டும்?

நூற்றெட்டுருவாயினும், பத்துருவாயினும் நியமமாகச் செபித்தல் வேண்டும்.

௩௯.—எந்தத்திக்கு முகமாக இருந்து செபித்தல் வேண்டும்?

கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் இருந்து செபித்தல் வேண்டும்.

௪0.—எப்படி இருந்து செபித்தல் வேண்டும்?

முழந்தாள் இரண்டையும் மடக்கி, காலோடு காலை அடக்கி, இடத்தொடையினுள்ளே வலப்புறங்காலை வைத்து, இரண்டு கண்களும் மூக்கு நுனியைப் பொருந்த நிமிர்ந்திருந்துகொண்டு, செபித்தல் வேண்டும்.

௪௧.—எப்படி இருந்து செபிக்கலாகாது?

சட்டை இட்டுக் கொண்டும், தலையிலே வேட்டி கட்டிக்கொண்டும், போர்த்துக்கொண்டும், குடுமியை விரித்துக் கொண்டும், கௌபீனந் தரியாமலும், வேட்டி தரியாமலும், பேசிக்

கொண்டும், இருளில் இருந்துகொண்டுஞ் செபிக்கலாகாது.

சஉ.—செபஞ் செய்யும் பொழுது மனம் எங்கே அழுந்திக் கிடத்தல் வேண்டும்?

சிவபெருமானிடத்திலேயே அழுந்திக் கிடத்தல் வேண்டும்.

சஙு.—நிற்கும்பொழுதும், நடக்கும்பொழுதும், இருக்கும்பொழுதும், கிடக்கும்பொழுதும், மற்றை எத்தொழிலைச் செய்யும் பொழுதும் மனசை எதிலே பதித்தல் வேண்டும்?

உயிர்க்குயிராகிய சிவபெருமானுடைய திருவடிகளிலேயே மனசைப் பதித்தல்வேண்டும்.

சச.—மரிக்கும்பொழுது எப்படி மரித்தல்வேண்டும்?

வேறொன்றிலும் பற்று வையாது, சிவபெருமானிடத்திலே பற்று வைத்து, தமிழ்வேதத்தைக் கேட்டுக்கொண்டும், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டும், மரித்தல் வேண்டும்.

திருச்சிற்றம்பலம்.

---

ஐந்தாவது

## நித்தியகருமவியல்.

---

சரு.—நாடோறும் நியமமாக எந்தநேரத்திலே நித்திரை விட்டெழுதல் வேண்டும்?

சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னே நித்திரை விட்டெழுதல் வேண்டும்.

௪௬.—நித்திரை விட்டெழுந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?

" விபூதி தரித்துச் சிவபெருமானைத் தியானித்துத் தோத்திரஞ் செய்து[redacted]ாண்டு, பாடங்களைப் படித்தல் வேண்டும்.

## மலசலமோசனம்.

௪௭.—அதற்குப் பின் யாது செய்யத் தக்கது

மல சல மோசனஞ் செய்யத் தக்கது.

௪௮.—எவ்விடத்திலே மல சலங் கழித்தல்வேண்டும்?

திருக்கோயிலுக்குத் தூரமாய் உள்ள தனியிடத்திலே மலசலங் கழித்தல் வேண்டும்.

௪௯.—எவ்விடங்களிலே மல சலங் கழிக்கலாகாது?

வழியிலும், குழியிலும், நீர்நிலையிலும், நீர்க்கரையிலும், கோமயம் உள்ள இடத்திலும், சாம்பர் உள்ள இடத்திலும், சுடுகாட்டிலும், பூந்தோட்டத்திலும், மரநிழலிலும், உழுத நிலத்திலும், அறுகம் பூமியிலும், பசுமந்தை நிற்கும் இடத்திலும், புற்றிலும், அருவி பாயும் இடத்திலும், மலையிலும் மல சலங் கழிக்கலாகாது.

௫௰.—எந்தத் திக்குமுகமாக இருந்துகொண்டு மலசலங் கழித்தல் வேண்டும்?

பகலிலே, வடக்கு முகமாகவும், இரவிலே தெற்கு முகமாகவும், இருந்துகொண்டு, மலசலங் கழித்தல் வேண்டும்.

௫௧.—எப்படி இருந்து மலசலங் கழித்தல் வேண்டும்?

தலையையுங் காதுகளையும் வஸ்திரத்தினாலே சுற்றி, மூக்குநுனியைப் பார்த்துக்கொண்டு, மௌனமாக இருந்து, மலசலங் கழித்தல் வேண்டும்.

---

## சௌசம்.

௫௨.—மலசலங் கழித்தவுடனே யாது செய்தல் வேண்டும்?

எழுந்து, சலக்கரையை அடைந்து, சலத்துக்கு ஒருசாணுக்கு இப்பால் இருந்துகொண்டு, சௌசஞ் செய்தல் வேண்டும்.

௫௩.—சௌசம் எப்படிச் செய்தல் வேண்டும்?

மண்ணுஞ் சலமுங்கொண்டு, இடக்கையினாலே, குறியில் ஒருதரமும், குதத்தில் ஐந்து தரத்துக்குமேலும், இடக்கையை இடையிடையே ஒவ்வொருதரமும், பின்னும் இடக்கையைப்

பத்துத்தரமும், இரண்டுகையையுஞ் சேர்த்து ஏழுதரமுஞ் சுத்திசெய்து, சகனத்தைத் துடைத்து, கால்களை முழங்கால் வரையும, கைகளை முழங்கை வரையும் ஒவ்வொருதரங் கழுவல் வேண்டும்.

ருச.—இப்படிச் செய்தபின் யாது செய்தல்வேண்டும்.

அவ்விடத்தை விட்டு வேறொரு துறையிலே போய், வாயையும், கண்களையும், நாசியையும், காதுகளையும், கை கால்களில் உள்ள நகங்களையுஞ் சுத்தி செய்து, எட்டுத்தரஞ் சலம் வாயிற் கொண்டு இடப்புறத்திலே கொப்பளித்தல் வேண்டும்.

ருரு.—வாய் கொப்பளித்தபின் யாது செய்தல்வேண்டும்?

தலைக்கட்டு இல்லாமல் மூன்றுதரம் ஆசமனஞ் செய்தல் வேண்டும். [ஆசமனம் - உறிஞ்சுதல்.]

ருசு.—ஆசமனம் எப்படிச் செய்தல் வேண்டும்?

வலக்கையை விரித்துப் பெருவிரலையுஞ் சிறுவிரலையும் பிரித்துவிட்டு பெருவிரலடியிற்சார்ந்த உழுந்தமிழ்ந்து சலத்தை ஆசமித்தல் வேண்டும்.

ருள்.—சௌசத்துக்குச் சமீபத்திலே சலம் இல்லையானால் யாது செய்தல் வேண்டும்?

பாத்திரத்திலே சலம் மொண்டு ஓரிடத்தில் வைத்துக்கொண்டு, மலசலங் கழித்து, சௌசஞ் செய்துவிட்டு, பாத்திரத்தைச்சுத்தி செய்து, சலம் மொண்டு, வாய்கொப்பளித்து, கால் கழுவல் வேண்டும்.

---

## தந்தசுத்தி.

ருஅ—சௌசத்துக்குப் பின் யாது செய்யத்தக்கது?

தந்தசுத்தி செய்யத் தக்கது.

ருகூ.—எதினாலே தந்த சுத்தி செய்தல் வேண்டும்?

சலத்தினாலே கழுவப்பட்ட பற்கொம்பினாலேனும், இலையினாலேனுந் தந்தசுத்தி செய்தல் வேண்டும்.

சுo.—எந்தத் திக்கு முகமாக இருந்து தந்த சுத்தி செய்தல் வேண்டும்?

கிழக்கு முகமாகவேனும், வடக்கு முகமாக வேனும் இருந்து கொண்டு, தந்தசுத்தி செய்தல் வேண்டும்.

சுக.—தந்தசுத்தி எப்படிச் செய்தல் வேண்டும்?

பல்லின் புறத்தையும் உள்ளையுஞ் செவ்வையாகச் சுத்தி செய்து, திருகழியை இரண்டாகப்

பிளந்து, அவைகளினாலே நாக்கை வழித்து, இடப்புறத்திலே போட்டுவிட்டு, சலம் வாயிற் கொண்டு பன்னிரண்டு தரம் இடப்புறத்திலே கொப்பளித்து, முகத்தையுங் கை கால்களையுங் கழுவல் வேண்டும்.

சுஉ.—நின்று கொண்டாயினும், நடந்து கொண்டாயினும், போர்த்துக்கொண்டாயினுந் தந்தசுத்தி பண்ணலாமா?

பண்ணலாகாது.

---

ஸ்நானம்.

சுந.—தந்த சுத்திக்குப் பின் யாது செய்யத்தக்கது?

ஸ்நானஞ் செய்யத் தக்கது.

சுச.—ஸ்நானஞ் செய்யத் தக்க நீர்நிலைகள் யாவை?

ஆறு, ஓடை, குளம், கேணி, மடு முதலியவைகளாம்.

சுரு.—ஸ்நானஞ் செய்யுமுன் யாது செய்தல் வேண்டும்?

கௌபீனத்தைக் கசக்கிப் பிழிந்து தரித்து, இரண்டு கைகளையுங் கழுவி, வேட்டியைத் தோய்த்து அலம்பித் தரித்து, உடம்பைச் சலத்தினாலே கழுவிச் செவ்வையாகத் தேய்த்துக் கொள்ளல் வேண்டும்.

கூகூ.—எவ்வளவினதாகிய சலத்திலே இறங்கி ஸ்நானஞ் செய்தல் வேண்டும்?

கொப்பூழளவினதாகிய சலத்திலே இறங்கி ஸ்நானஞ் செய்தல் வேண்டும்.

கூஎ.—எந்தத் திக்கு முகமாக நின்று ஸ்நானஞ் செய்தல் வேண்டும்?

நதியிலேயானால் அதற்கு எதிர்முகமாக நின்றும், குளம் முதலியவைகளிலே யானால் கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் நின்றும், ஸ்நானஞ் செய்தல் வேண்டும்.

கூஅ.—சலத்திலே எப்படி முழுகல் வேண்டும்?

ஆசமனஞ்செய்து, இரண்டு காதுகளையும் இரண்டு பெருவிரல்களினாலும், இரண்டு கண்களையும் இரண்டு சுட்டுவிரல்களினாலும், இரண்டு நாசிகளையும் இரண்டு நடுவிரல்களினாலும் மூடிக்கொண்டு, சிவபெருமானைச் சிந்தித்து, முழுகல்வேண்டும்.

கூகூ.—இப்படி முழுகினவுடனே யாது செய்தல் வேண்டும்?

ஆசமனஞ் செய்துகொண்டு, கரையிலேறி, வேட்டியைப் பிழிந்து, தலையிலுள்ள ஈரத்தைத் துவட்டி, உடனே நெற்றியில் விபூதிதரித்து, உடம்பிலுள்ள ஈரத்தைத துவட்டி குடுமியை

முடித்து, ஈரக் கௌபீனத்தை நீக்கி, உலர்ந்த கௌபீனத்தைத் தரித்து, இரண்டு கைகளையுங் கழுவி, உலர்ந்த வஸ்திரத்தைத் தரித்துக் கொண்டு, ஈரவஸ்திரத்தையுங் கௌபீனத்தையும் உலரும்படி கொடியிலே போடல்வேண்டும்.

௭௦.—சிரஸ்நானஞ்செய்ய இயலாதவர் யாது செய்தல் வேண்டும்?

கண்ட ஸ்நானமேனும், கடிஸ்நானமேனுஞ் செய்தல் வேண்டும்.

௭௧.—கண்ட ஸ்நானமாவது யாது?

சலத்திலே கழுத்தின் கீழே கழுவி, கழுவாது எஞ்சிய உடம்பை நனைந்த வஸ்திரத்தினாலே ஈரம்படும்படி துடைப்பது.

௭௨.—கடி ஸ்நானமாவது யாது?

சலத்திலே அரையின் கீழே கழுவி, கழுவாது எஞ்சிய உடம்பை நனைந்த வஸ்திரத்தினாலே ஈரம்படும்படி துடைப்பது.

---

## அநுட்டானம்.

௭௩.—ஸ்நானத்துக்குப் பின் யாது செய்தல் வேண்டும்?

சுத்த சலங்கொண்டு அநுட்டானம் பண்ணி, பஞ்சாக்ஷரசெபஞ்செய்து தோத்திரம் பண்ணல்வேண்டும்.

போசனம்.

௭௪.—அதற்குப் பின் யாது செய்யத் தக்கது?

போசனஞ் செய்யத் தக்கது.

௭௫.—போசன பந்திக்கு யோக்கியராவார் யாவர்?

மதுபானமும் மாமிச போசனமும் இல்லாதவராயும், சமசாதியாராயும், ஆசாரம் உடையவராயும் உள்ளவர்.

௭௬.—எவர்களிடத்திலே போசனம் பண்ணலாகாது?

தாழ்ந்த சாதியாரிடத்திலும், கள்ளுக்குடிப்பவரிடத்திலும், மாமிசம் புசிப்பவரிடத்திலும், ஆசாரம் இல்லாதவரிடத்திலும் போசனம் பண்ணலாகாது.

௭௭.—இவர்கள் காணும்படி போசனம் பண்ணலாமா?

போசனம் பண்ணலாகாது.

௭௮.—எவ்வகைப்பட்ட தானத்தில் இருந்து போசனம் பண்ணல் வேண்டும்?

கோமயத்தினாலே மெழுகப்பட்ட தானத்தில் இருந்து போசனம் பண்ணல் வேண்டும்.

௭௯.—போசனத்துக்கு உரிய பாத்திரங்கள் யாவை?

வாழையிலை, பலாவிலை, புன்னையிலை, பலாசிலை, பாதிரியிலை, தாமரையிலை என்பவைகளாம்.

அ0—போசன பாத்திரங்களை யாது செய்தபின் போடல் வேண்டும்?

சலத்தினலே நன்ருகக் கழுவியபின் போடல் வேண்டும்.

அக.—வாழையிலையை எப்படிப் போடல் வேண்டும்?

தண்டுரியாமல் அதினுடைய அடி வலப்பக்கத்திலே பொருந்தும்படி போடல் வேண்டும்.

அஉ.—இலைபோட்டபின் யாது செய்தல்வேண்டும்?

அதிலே சலத்தினலே புரோக்ஷித்து, லவணம், கறி, அன்னம், பருப்பு, நெய், இவைகளைப் படைத்தல் வேண்டும்.

அங.—போசனம் பண்ணும்போது எப்படி இருத்தல்வேண்டும்?

வீண் வார்த்தை பேசாமலும், சிரியாமலும், தூங்காமலும், அசையாமலும், கால்களை மடக்கிக்கொண்டு செவ்வையாக இருத்தல் வேண்டும்.

அச.—போசனம் எப்படிப் பண்ணல் வேண்டும்?

அன்னத்திலே பிசையத்தக்க பாகத்தை வலக்கையினலே வலப்பக்கத்திலே வேருகப்பிரித்து, பருப்பு நெய்யோடு பிசைந்து, சிந்தாமற் புசித்தல் வேண்டும். அதன்பின் சிறிது பாகத்

தை முன்போலப் பிரித்து, புளிக்கறியோடாயி னும், ரசத்தோடாயினும் பிசைந்து புசித்தல் வேண்டும். அதன்பின் மோரோடு பிசைந்து புசித்தல்வேண்டும. கறிகளை இடையிடையே தொட்டுக் கொள்ளல் வேண்டும். இலையிலும், கையிலும் பற்றறததுடைத்துப் புசித்தபின், வெந்நீரேனும் தண்ணீரேனும் பானம்பண்ணல் வேண்டும்.

அடு.—போசனம் பண்ணும்போது உமியத்தக்க தை எங்கே உமிதல் வேண்டும்?

இலையின் முற்பக்கத்தை மித்தி, அதன் கீழ் உமிதல் வேண்டும்.

அசு.—போசனம் பண்ணும்போது மனசை எதி லே இருத்துதல் வேண்டும்?

சிவபெருமானுடைய திருவடியிலே இருத்து தல் வேண்டும்.

அஎ.—போசனம் முடிந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?

எழுந்து, வீட்டுக்குப் புறத்தே போய், கை களைக் கழுவி, சலம் வாயிற்கொண்டு பதினாறுத ரம், இடப்புறத்திலே தொப்பளித்து, வாயையும், கைகளையும், கால்களையுங் கழுவல் வேண்டும்.

அஅ.—உச்சிட்டத்தை எப்படி அகற்றல்வேண்டும்?

இலையை எடுத்து எறிந்துவிட்டு, கை கழுவிக் கொண்டு, உச்சிட்டத் தானத்தைக் கோமயஞ் சேர்ந்த சலந்தெளித்து மெழுகி, புறத்தே போய்க் கை கழுவிவிட்டு, பின்னும அந்தத் தானத்திலே சலந் தெளித்துவிடல் வேண்டும்.

அகூ.—உச்சிட்டத் தானத்தை எப்படி மெழுகல் வேண்டும்?

இடையிலே கையை எடாமலும், முன்பு தீண்டிய இடத்தைப் பின்பு தீண்டாமலும், புள்ளியில்லாமலும் மெழுகல் வேண்டும்.

படித்தல்.

கூ0.—போசனத்துக்குப் பின் யாது செய்யத் தக்கது?

உபாத்தியாயரிடத்தே கல்வி கற்கத் தக்கது.

---

இராவிற்செய்யுங்கருமம்.

கூக.—சூரியன் அத்தமிக்கும்போது யாது செய்தல் வேண்டும்?

மல சல மோசனஞ் செய்து, சௌசமும் ஆசமனமும் பண்ணி, விபூதி தரித்து, சிவபெருமானை வணங்கித் தோத்திரஞ் செய்துகொண்டு, விளக்கிலே, பாடங்களைப் படித்தல் வேண்டும்.

கூஉ.—அதன் பின் யாது செய்தல் வேண்டும்?

போசனஞ்செய்து நூறடி உலாவி சிறிதுநேரஞ் சென்றபின் சயனித்தல் வேண்டும்.

௩௩.—எப்படிச் சயனித்தல் வேண்டும்?

கிழக்கேயாயினும், மேற்கேயாயினும், தெற்கேயாயினுந் தலை வைத்து, சிவபெருமானைச் சிந்தித்துக்கொண்டு வலக்கை மேலாகச் சயனித்தல் வேண்டும். வடக்கே தலை வைக்கலாகாது.

௩௪.—எப்போது எழுந்து விடல் வேண்டும்?

சூரியன் உதிக்க ஐந்துநாழிகைக்கு முன்னே எழுந்து விடல்வேண்டும்.

திருச்சிற்றம்பலம்.

---

ஆறாவது

## சிவாலயதரிசனவியல்.

---

௩௫.—சிவபெருமானை வழிபடுதற்கு உரிய முக்கிய ஸ்தானம் யாது?

திருக்கோயில்.

௩௬.—திருக் கோயிலுக்கு எப்படிப் போதல் வேண்டும்?

ஸ்நானஞ் செய்து, தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்து, விபூதி இட்டுக்கொண்டு போதல் வேண்டும்.

கஎ.—திருக்கோயிலுக்குச் சமீபித்தவுடனே யாது செய்தல் வேண்டும்?

தூலலிங்கமாகிய திருக்கோபுரத்தைத் தரிசித்து, இரண்டு கைகளையுஞ் சிரசிலே குவித்து, சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு, உள்ளே போதல்வேண்டும்.

கஅ.—திருக்கோயிலினுள்ளே போனவுடன் யாது செய்தல் வேண்டும்?

பலிபீடத்துக்கு இப்பால் நமஸ்காரம பண்ணல் வேண்டும்.

கக.—கிழக்கு நோக்கிய சந்நிதானத்திலும், மேற்கு நோக்கிய சந்நிதானத்திலும், எந்தத்திக்கிலே தலைவைத்து நமஸ்காரம்பண்ணல்வேண்டும்?

வடக்கே தலை வைத்து நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

க00.—தெற்கு நோக்கிய சந்நிதானத்திலும், வடக்கு நோக்கிய சந்நிதானத்திலும், எந்தத் திக்கிலே தலை வைத்து நமஸ்காரம் பண்ணல்வேண்டும்?

கிழக்கே தலை வைத்து நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

க0க—எந்தத் திக்குகளிலே கால் நீட்டி நமஸ்காரம் பண்ணலாகாது?

கிழக்கிலும் வடக்கிலும் கால் நீட்டி நமஸ்காரம் பண்ணலாகாது.

௧௦௨.—ஆடவர்கள் என்ன நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?

அட்டாங்க நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

௧௦௩.—அட்டாங்க நமஸ்காரமாவது யாது?

தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டவயவமும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல்.

௧௦௪.—பெண்கள் என்ன நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?

பஞ்சாங்க நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

௧௦௫.—பஞ்சாங்க நமஸ்காரமாவது யாது?

தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்தவயவமும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல்.

௧௦௬.—நமஸ்காரம் எத்தனைதரம் பண்ணல்வேண்டும்?

மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பண்ணல் வேண்டும். ஒருதரம் இருதரம் பண்ணுதல் குற்றம்.

௧௦௭.—நமஸ்காரம் பண்ணியபின் யாது செய்தல் வேண்டும்?

பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

௧௦௮.—எப்படிப் பிரதக்ஷிணம் பண்ணல்வேண்டும்?

இரண்டு கைகளையும் சிரசிலேனும் மார்பிலே னும் குவித்து, சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு, கால்களை மெல்லவைத்துப் பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

கoகூ.—பிரதக்ஷிணம் எத்தனைதரம் பண்ணல் வேண்டும்?

மூன்று தரமாயினும், ஐந்து தரமாயினும், ஏழு தரமாயினும், ஒன்பது தரமாயினும் பண்ணல் வேண்டும்.

கக0.—சுவாமி சந்நிதானங்களை எந்தமுறையாகத் தரிசனஞ் செய்தல் வேண்டும்?

முன் விக்கினேசுரரைத் தரிசனஞ்செய்து, பின் சிவலிங்கப்பெருமானையும் உமாதேவியாரையுந் தரிசனஞ்செய்து, விபூதி வாங்கித் தரித்துக்கொண்டு, அதன் பின் சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளைத் தரிசனஞ் செய்தல் வேண்டும்.

ககக.—விக்கினேசுரரைத் தரிசிக்கும்பொழுது யாது செய்தல் வேண்டும்?

முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினுலும நெற்றியிலே மூன்று முறை குட்டி வலக்காதை இடக்கையினுலும், இடக்காதை வலக்கையினு

லும் பிடித்துக்கொண்டு மூன்று முறை தாழ்ந்தெழுந்து, கும்பிடல்வேண்டும்.

ககஉ.—சந்நிதானங்களிலே தரிசனம் பண்ணும்பொழுதெல்லாம் யாது செய்தல் வேண்டும்?

இரண்டு கைகளையுஞ் சிரசிலாயினும் மார்பிலாயினுங் குவித்துக்கொண்டு, மனங் கசிந்துருகத் தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

ககங.—எந்தக் காலத்திலே சுவாமி தரிசனஞ் செய்யலாகாது?

அபிஷேகம் நிவேதனம் முதலியவை நடக்கும்பொழுது தரிசனஞ் செய்யலாகாது.

ககச.—அபிஷேககாலத்திலே பிரதக்ஷிண நமஸ்காரங்களும் பண்ணலாகாதா?

அப்பொழுது உட்பிராகாரத்திலே பண்ணலாகாது.

ககரு.—தரிசனம் முடிந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?

சண்டேசுரர் சந்நிதியை அடைந்து, கும்பிட்டு, மூன்று முறை கை கொட்டி, சிவதரிசன பலத்தைத் தரும்பொருட்டுப் பிரார்த்தித்தல் வேண்டும்

ககசு.—சண்டேசுர தரிசனத்தின் பின் யாதுசெய்தல் வேண்டும்?

சிவசந்நிதானத்தை அடைந்து, நமஸ்காரம் பண்ணி, இருந்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தில் இயன்ற உருச்செபித்துக் கொண்டு, எழுந்து, வீட்டுக்குப் போதல் வேண்டும்.

கக௭.—நித்தியமும் நியமமாக ஆலய தரிசனஞ்செய்ய இயலாதவர் யாது செய்தல் வேண்டும்?

சோமவாரம், மங்கலவாரம், சுக்கிரவாரம், பிரதோஷம், பௌர்ணிமை, அமாவாசை, திருவாதிரை, கார்த்திகை மாசப்பிறப்பு, சூரியகிரகணம், சந்திரகிரகணம், சிவராத்திரி, நவராத்திரிமுதலிய புண்ணிய காலங்களிலாயினுந் தரிசனஞ் செய்தல் வேண்டும்.

ககஅ.—திருக்கோயிலிலே செய்யத் தகாத குற்றங்கள் யாவை?

ஆசாரமில்லாது போதல், கால்கழுவாதுபோதல், எச்சிலுமிழ்தல், மலசலங் கழித்தல், மூக்குநீர் சிந்துதல், ஆசனத்திருத்தல், சயனித்தல், காலை நீட்டிக்கொண்டிருத்தல், மயிர் கோதி முடித்தல், சூதாடல், பாக்கு வெற்றிலையுண்டல், சிரசிலே வஸ்திரந் தரித்துக்கொள்ளுதல், தோளிலே உத்தரீயம் இட்டுக்கொள்ளுதல், சட்டையிட்டுக் கொள்ளுதல், பாதரக்ஷையிட்டுக்

கொள்ளுதல், விக்கிரகத்தைத் தொடுதல், திரு மாலியத்தைக் கடத்தல், திருமாலியத்தை மிதித்தல், தூபி துசத்தம்பம் பலிபீடம் விக்கிரகம் என்னும் இவைகளின் நிழலைமிதித்தல், வீண்வார்த்தை பேசல், சிரித்தல், சண்டையிடுதல், விளையாடுதல், சுவாமிக்கும் பலிபீடத்துக்குங் குறுக்கே போதல் முதலானவைகளாம்.

திருச்சிற்றம்பலம்.

---

ஏழாவது

## தமிழ்வேதவியல்.

---

கக.—சைவசமயிகள் ஓதவேண்டிய தமிழ் வேதங்கள் எவை?

தேவாரம் திருவாசகம் என்னும் இரண்டுமாம்.

கஉ0.—தேவாரஞ் செய்தருளினவர் யாவர்?

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர், திருநாவுக்கரசுநாயனர், சுந்தரமூர்த்திநாயனர் என்னும் மூவர்.

கஉக —திருவாசகஞ் செய்தருளினவர் யாவர்?

மாணிக்கவாசக சுவாமிகள்.

கஉஉ.—திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் எங்கே திருவவதாரஞ் செய்தருளினர்?

சோழநாட்டில் உள்ள சீர்காழியிலே வைதிகப்பிராமண குலத்திலே திருவவதாரஞ் செய்தருளினார்.

கஉ௩.—திருநாவுக்கரசுநாயனார் எங்கே திருவவதாரஞ் செய்தருளினார்.

திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருவாமூரிலே வேளாள குலத்திலே திருவவதாரஞ் செய்தருளினார்.

கஉ௪.—சுந்தரமூர்த்திநாயனார் எங்கே திருவவதாரஞ் செய்தருளினார்?

திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருநாவலூரிலே சிவப்பிராமண குலத்திலே திருவவதாரஞ் செய்தருளினார்.

கஉ௫.—மாணிக்கவாசக சுவாமிகள் எங்கே திருவவதாரஞ் செய்தருளினார்?

பாண்டிநாட்டில் உள்ள திருவாதவூரிலே அமாத்தியப் பிராமண குலத்திலே திருவவதாரஞ் செய்தருளினார்.

கஉ௬.—திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் முதலியநால்வரும் எவ்வாறு பெயர் பெறுவர்கள்?

சைவ சமய குரவர்கள் எனப் பெயர் பெறுவர்கள்.

கஉ௭.—யாது காரணத்தினால் இவர்கள் சைவசமய குரவர்கள் எனப் பெயர் பெறுவர்கள்?

பல அற்புதங்களைக் கொண்டு சைவசமயமே மெய்ச்சமயம் என்று தாபித்தபடியினாலே சைவ சமய குரவர்கள் எனப் பெயர் பெறுவார்கள்.

௧௨௮.—திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரிடத்தில் விளங்கிய அற்புதங்கள் யாவை?

(௧.) மூன்றாம் வயசிலே உமாதேவியார் கறந்து பொற்கிண்ணத்தில் ஊட்டிய திருமுலைப்பாலை உண்டது.

(௨.) சிவபெருமானிடத்திலே பொற்றாளமும், முத்துப் பல்லக்கும, முத்துச் சின்னமும், முத்துக் குடையும், முத்துப் பந்தரும், உலவாக்கிழியும், படிக்காசும் பெற்றது.

(௩.) வேதாரணியத்திலே வேதங்களினாலே பூட்டப்பட்டுத் திருநாவுக்கரசு நாயனாருடைய திருப்பதிகத்தினாலே திறக்கப்பட்ட திருக்கதவு அடைக்கப் பாடினது.

(௪.) பாலை நிலத்தை நெய்தனிலமாகும்படி பாடினது.

(௫.) பாண்டியனுக்குக் கூனையுஞ் சுரத்தையும் போக்கினது.

(௬.) சமணர்களெதிரே தேவாரத் திருவேட்டை அக்கினியிலே போட்டுப் பச்சையாக எடுத்தது.

(௭.) வைகையாற்றிலே திருவேட்டைப் போட்டு எதிரேறும்படி செய்தது.

(௮.) புத்த நந்தியுடைய தலையிலே இடியிடிக்கச் செய்தது.

(௯.) ஆற்றிலே தாமும் அடியார்களும் ஏறிய ஓடத்தைத் திருப்பதிகத்தினாலே கரைசேர்த்தது.

(௧0.) ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கினது.

(௧௧.) விஷத்தினால் இறந்த செட்டியை உயிர்ப்பித்தது.

(௧௨.) விஷத்தினால் இறந்த பெண்ணினுடைய எலும்பைப் பெண்ணாக்கினது.

(௧௩.) தமது திருக்கல்யாணந் தரிசிக்கவந்தவர்கள் எல்லாரையுந் தம்மோடு அக்கினியிலே புகுவித்து முத்தியிலே சேர்த்தது.

௧௨௯.—திருநாவுக்கரசுநாயனார் சரித்திரத்தில் விளங்கிய அற்புதங்கள் யாவை?

(௧.) சமணர்களாலே ஏழுநாள் சுண்ணாம்பறையிலே பூட்டப்பட்டிருந்தும் வேவாது பிழைத்தது.

(௨.) சமணர்கள் கொடுத்த நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டுஞ் சாவாது பிழைத்தது.

(௩.) சமணர்கள் விடுத்த யானையினால் வலஞ் செய்து வணங்கப்பட்டது.

(௪.) சமணர்கள் கல்லிலே சேர்த்துக் கட்டிச் சமுத்திரத்தில் இடவும் அக்கல்லே தோணியாகக் கரையேறினது.

(௫.) சிவபெருமானிடத்திலே படிக்காசு பெற்றது.

(௬.) வேதாரணியத்திலே வேதங்களாலே பூட்டப்பட்ட திருக்கதவு திறக்கப் பாடினது.

(௭.) விஷத்தினால் இறந்த பிராமணப்பிள்ளையை உயிர்ப்பித்தது.

(௮.) காசிக்கு அப்பால் ஒரு தடாகத்தினுள் மூழ்கித் திருவையாற்றில் ஒரு வாவியின்மேலே தோன்றிக் கரையேறினது

௧௩0.—சுந்தரமூர்த்திநாயனாரிடத்தில் விளங்கிய அற்புதங்கள் யாவை?

(௧.) செங்கற்கள் பொன்னாகப் பெற்றுக் கொண்டது.

(௨.) சிவபெருமான் கொடுத்தருளிய பன்னீராயிரம் பொன்னை விருத்தாசலத்தில் உள்ள ஆற்றிலே போட்டுத் திருவாரூரில் உள்ளகுளத்தில் எடுத்தது.

(௩.) காவேரியாறு பிரிந்து வழிவிடச் செய்தது.

(௪.) முதலை விழுங்கிய பிராமணப் பிள்ளையை அம்முதலை வாயினின்றும் அழைத்துக் கொடுத்தது.

(௫.) வெள்ளையானையில் ஏறிக்கொண்டு திருக்கைலாசத்துக்கு எழுந்தருளினது.

௧௩௧.—மாணிக்கவாசக சுவாமிகளிடத்தில் விளங்கிய அற்புதங்கள் யாவை?

(௧.) சிவபெருமானே நரியைக் குதிரையாக்கிக் கொண்டு வரும்படிக்கும், மண்சுமந்து அடிபடும்படிக்கும் பெற்றுக் கொண்டது.

(௨.) புத்தர்களைத் தருக்கத்தில் வென்று ஊமைகளாக்கிப் பின் ஊமை தீர்த்துச் சைவர்களாக்கினது.

(௩.) பிறவி தொடுத்து ஊமையாய் இருந்த ஒருபெண்ணை ஊமை தீர்த்துப் புத்தர்கள்வினவிய வினாக்களுக்கு விடை சொல்லும்படி செய்தது.

தம்முடைய திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் சிவபெருமானே எழுந்தருளிவந்து எழுதும்படி பெற்றுக்கொண்டது.

(௫.) எல்லாருங்காணக் கனகசபையினுள்ளே புகுந்து சிவத்தோடு கலந்தது.

௩௩௨.—இந்த அற்புதங்களினாலே யாது விளங்குகின்றது?

சைவ சமயமே மெய்ச்சமயம் என்பது நன்றாக விளங்குகின்றது.

௩௩௩.—தமிழ் வேதம் ஓதுதற்கு யோக்கியர் யாவர்

மதுபானமும் மாமிசபோசனமும் இல்லாதவராய், ஆசாரமுடையவராய், சிவதீக்ஷை பெற்றவராயு முள்ளவர்.

௧௩௪.—தமிழ் வேதத்தை எப்படி ஓதல் வேண்டும்?

சுத்தி செய்யப்பட்ட இடத்திலே பீடத்தின் மேலே தமிழ் வேதபுத்தகத்தை வைத்து, அருச்சித்து, நமஸ்காரஞ்செய்து, இருந்துகொண்டு, அன்புடனே ஓதல்வேண்டும். புத்தகத்தை நிலத்திலேனும், ஆசனத்திலேனும், படுக்கையிலேனும், மடியிலேனும் வைக்கலாகாது.

[illegible].—தமிழ்வேதத்தை அன்புடனே [illegible] ஓதினவர் யாது பயன் பெறுவர்?

சிவபெருமானுடைய [illegible] பேரின்பத்தை அநுபவ[illegible]

திருச்சிற்ற[illegible]

---

சைவ வினாவிடை முதற்புத்தகம்

முற்றுப் பெற்றது.

---

ஸ்ரீ க. சுப்பிரமணிய ஐயர், B.A.

[illegible]

அன்பளிப்பு